12th August 1960]

(ஆ) அப்படியானின், விவரங்கள் யாவை?

THE HON. SRI R. VENKATARAMAN. (அ) & (ஆ) There is no proposal to establish a factory for the manufacture of Rice Bran Oil in public sector. There are, however, some enquiries from private parties.

SRI P. G. MANICKAM: அரிசித் தவிட்டிலிருந்து இவ்வாறு எண்ணெய் எடுக்கப்படுமானால், கால்நடைகளின் போஷாக்குக்கு பாதகம் ஏற்படுகிறது அல்லவா? தவிடு கால்நடைகளின் முக்கிய மான உணவாக இருப்பதால், அதன் சத்து குறையாமலிருப்பதற் காக, இப்படிப்பட்ட தொழிற்சாலையை ஏற்படுத்துவதை நிறுத்த முயற்சி எடுக்கப்படுமா?

THE HON. SRI R. VENKATARAMAN: அந்த எண்ணெயை எடுப்பது மாட்டுத் தீவனத்திற்கு நல்லது; மாட்டின் உடம்புக்கும் நல்லது. ஆராய்ச்சி செய்துதான் இதை எடுப்பதற்கு முயற்சி செய்யப்படுகிறது. இதனால் வருமானமும் வரும், மாட்டுத் தீவனமும் உயர்ந்த ரகமாகும் என்று கேள்வி.

*Central Textile Wage Board*

* 134 Q.—SRI N. K. PALANISAMI
SRI S. PAKKIRISAMI PILLAI
SRI M. P. SARATHI
SRI A. A. RASHEED
SRI P. S. CHINNADURAI
} Will the Hon. the Minister for Industries be pleased to state the steps taken by the Government to make the mill owners implement the recommendations of the Central Textile Wage Board?

THE HON. SRI R. VENKATARAMAN: The Government held a series of discussions with the representatives of textile workers and millowners and as a result, an amicable settlement was reached on 30th June 1960. This settlement has been accepted by a majority of the mills in the State. It is expected that the remaining mills also will accept the settlement in due course.

SRI N. K. PALANISAMI: ஒப்பந்தத்தை அமுல் செய்யாத மில்கள் மீது என்ன நடவடிக்கை எடுக்கப்படும்? எத்தனை முதலாளிகள் இந்த ஒப்பந்தத்தை அமுல் செய்யவில்லை என்று சொல்ல முடியுமா?

THE HON. SRI R. VENKATARAMAN: அமுல் செய்யாத மில்கள் மிக, மிக சொற்பம். அவைகளில் இருக்கும் தொழிற் சங்கங்கள் நேரடியாக பேச்சு வார்த்தைகள் நடத்திக்கொண்டிருக் கின்றன.

SRI A. A. RASHEED: May I know whether any agreement has been reached between the workers and the B and C Mills?

THE HON. SRI R. VENKATARAMAN: Not to my knowledge.

[12th August 1960

**Sri S. PAKKIRISAMI PILLAI :** பக்கிங்காம் கர்னடிக் மில் தொழிலாளர்களுக்கும் மானேஜ்மென்டாருக்கும் நடந்த ஒரு பேச்சுவார்த்தை முறிந்துவிட்டதனல், மேற்கொண்டு அரசாங்கத்தார் இந்த சிபார்சுகளை அமுல் செய்வதற்கு என்ன நடவடிக்கை எடுப்பார்கள் என்று சொல்ல முடியுமா ?

**The Hon. Sri R. VENKATARAMAN :** இந்தப் பொதுவான ஒப்பந்தத்தை 'கோயமுத்தூர் அக்ரிமெண்ட்' என்று பழக்கத்தில் சொல்கிறேம். கோயமுத்தூர் அக்ரிமெண்டில் இருக்கும் ஷரத்துக்கள் எல்லாவற்றையும் பக்கிங்காம் மில் சொந்தக்காரர்கள் ஏற்றுக்கொள்ள முடியாது என்று 30-ம் தேதி நடந்த பேச்சுவார்த்தையின்போது அவர்கள் சொல்லியிருக்கிறர்கள். மூன்று அதிகப்படியான சலுகைகளைத் தொழிலாளர்கள் கேட்பதாகவும், அதைக் கொடுக்க இயலாது என்பதும் அவர்கள் கட்சி. தொழிற் சங்கம் விரும்பினல் அந்த மூன்று பிரச்சினைகளையும் தொழில் கோர்ட்டுக்கு விடுவதற்குத் தயாராக இருக்கிறேன். அதைவிட நல்ல உயர்ந்த சிபார்சு ஒன்று நான் செய்தேன். அந்த மூன்று சலுகைகளில் இரண்டை முழுவதாகக் கொடுப்பதாகவும், மூன்ருவதில் ஒரு பகுதி கொடுப்பதாகவும் மில் முதலாளிகள் ஏற்றுக் கொண்டார்கள். அதைத் தொழிற் சங்கங்கள் ஏற்றுக்கொள்வதாயிருந்தால் அதையும் அமுல் செய்யச் சொல்வதற்கு சர்க்கார் தயாராக இருக்கிறது.

**Sri S. PAKKIRISAMI PILLAI :** இதர மில்களில் இம்மாதிரி சலுகைகளைத் தனித் தனியாக கொடுத்துக் கொண்டிருக்கும் போது, பக்கிங்காம் கர்னடிக் மில்லில் மாத்திரம் 'இந்தச் சலுகையை வாபஸ் வாங்கின பிறகுதான் சிபார்சுகளுக்கு அமுல் கொடுக்கும்படியான நிலையில் இருப்போம்' என்று சொன்னதை அரசாங்கத்தார் எப்படி ஏற்றுக்கொண்டு, இந்த ஒரு 'கன்ஸிலியேஷனை' ஏற்படுத்தினர்கள் என்று சொல்ல முடியுமா ?

**The Hon. Sri R. VENKATARAMAN :** எந்த ஒரு விவாதத்திலும் சரி, சாதாரணமாக ஒரு தொழில் தகராறில் இரண்டு கட்சிகள் உண்டு. தொழிலாளிகள் ஒரு கட்சி சொல்வார்கள்; முதலாளிகள் ஒரு கட்சி சொல்வார்கள். இதில் நியாயம் எது, அநியாயம் எது என்பதைத் தீர்மானம் செய்வது எங்களுடைய உரிமையல்ல; கடமையும் அல்ல. அதை நாங்கள் செய்வதும் கிடையாது. எது நியாயம் என்று சொல்லவேண்டுமென்றல் அதை 'அட்ஜுடிகேஷ'னுக்கோ, 'ஆர்பிட்ரேஷ'னுக்கோ விட்டு விடுகிறேம். 'நீங்கள் ஏதாவது இரண்டு பேருக்கும் சமாச யோசனை சொல்லுங்கள்' என்றல் சொல்கிறேம். அதை ஏற்றுக் கொள்ளவேண்டும் என்ற அவசியம் யாருக்கும் கிடையாது. 'இந்தத் தகராறில் சட்டப்படி நாங்கள் மூன்று சலுகைகளைக் கொடுக்க வேண்டியதில்லை; இதுதான் இன்றைக்கு இருக்கும் சட்ட நிலைமை' என்பது அவர்களுடைய கட்சி. அந்தச் சலுகைகளைக் கொடுக்கவேண்டும் என்பது தொழிலாளர்களுடைய கட்சி. கன்ஸிலியேஷனுக்கு வேண்டுமானல் போகலாம். இல்லாவிட்டால் வேறு ஒப்பந்தம் செய்துகொள்ளலாம்.

12th August 1960]

**SRI P. S. CHINNADURAI :** கனம் சபாநாயகர் அவர்களே, இந்த உடன்பாட்டைப் பெரும்பாலான முதலாளிகள் ஒப்புக் கொண்டிருந்துங்கூட, கோயமுத்தூரிலுள்ள சுமார் ஐந்து முதலாளிகள் ஒப்புக்கொள்ளவில்லை. பக்கிங்காம் கர்னாடிக் மில்லும் ஒப்புக்கொள்ளாமல் இருக்கிறது. இந்த விவகாரத் திற்குப் பைசல் காணும் முறையில் அரசாங்கத்தார் மீண்டும் ஒரு முறை, இதுவரை உடன்பாட்டிலே சேராமல் இருக்கும் முதலாளி களை அழைத்துவைத்து, இறுதியாக ஒரு பைசல் காண முயற்சி எடுத்துக்கொள்வார்களா ?

**THE HON. SRI R. VENKATARAMAN :** கோயமுத்தூர் பகுதியைப் பொறுத்த அளவில், கனம் சின்னதுரை அவர்களும், இதர தொழிற் சங்கங்களும், ‘நாங்கள் பேச்சு வார்த்தை நடத்தினது முறிந்துவிட்டது, இனி எங்களால் பேச்சு வார்த்தை நடத்தமுடியாது’ என்று தெரிவிப்பார்களானால், சர்க்கார் அப்பொழுது தலையிட்டு, மறுபடியும் அவர்களை மாத்திரம் அழைத்து எந்த முறையில் அதைக் தீர்க்கமுடியும் என்று பரி சீலிக்கும்.

மற்ற பகுதிகளிலே இருக்கும் மில்களைப்பற்றி எனக்கு எந்த விதமான புகாரும் வரவில்லை.

**SRI N. K. PALANISAMI :** ஒப்பந்தம் செய்யாத மில்களில் ஒப்பந்தம் செய்ய தொழிலாளர்கள் நேரடி நடவடிக்கை எடுத்தால் அந்த நடவடிக்கைக்கு சர்க்கார் ஆதரவு கொடுப்பார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : It is a hypothetical question.

*Employment Exchange*

* 135 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Industries be pleased to state the number of persons who secured employment through the Employment Exchange in the Madras City in 1959–60?

THE HON. SRI R. VENKATARAMAN : The number of persons who secured employment through Employment Exchange in the Madras City during 1959–60 is 3,877.

SRI A. A. RASHEED : Is it a fact that persons who have registered their names as far back as three years, have not yet secured employment and still their names are found in the registers and if so, what is the reason?

THE HON. SRI R. VENKATARAMAN : It is true that people who have registered some three years ago, have not found employment. The reason is that there is a lot of unskilled and clerical applicants. There is a dearth of skilled, semi-skilled and other artisans. Yesterday in the course of a debate, I read out the list of shortages in this State. There is considerable shortage of fitters,